பிரயாசையின்றியே பிளந்தது. கஜமுகன் மூஷிக வடிவங் கொண்டு விநாயகரை எதிர்த்தான்

கணபதி அவன் மீது கருணை பொழிந்து அவனையே வாகனமாக்கிக் கொண்டருளினார்.

மாலயனாதி வானவர்கள் துன்பம் நீங்கி இன்பமடைந்து விநாயக மூர்த்தியை வணங்கி நின்றார்கள்.

"எங்கள் இடர்தீர்த்த எந்தையே! பன்னெடுங்காலமாக நாங்கள் கஜமுகன் முன்னிலையில் தோப்புக்கரணம் போட்டோம். தாங்கள் அவனை அழித்து எங்களுக்கு இன்னருள் புரிந்தீர்கள். இனி தங்கள் திருமுன் நாங்கள் தோப்புக்கரணம் போடுவோம. இதுபோல் தங்கள் திருமுன் தோப்புக்கரணம் போடுபவர் யாவராயினும் அவர்கள் இடரைக் களைந்து ஆண்டருள் புரிய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள்.

"உங்கள் விருப்பம் போலவே ஆகட்டும்" என்று மனம் நிறைந்து கூறினார். நிறைவின் சின்னமாகவே பேழை வயிற்றுடன இலங்கும் பெருமான், "அசுரர் முன் செய்தாற் போல் ஆயிரம் தோப்புக்கரணம் போட வேண்டாம். மூன்று முறை போட்டாலே திருப்தி அடைவோம்" என்று வரமளித்தார் கரிமுக வரதர்.

# ஹரிஹர புத்திரன்

ஐந்து கரப் பெருமான் காக வடிவிற் சென்று அகத்திய முனிவருடைய கமண்டலத்தைக் கவிழ்த்ததால் அக்கமண்டலத்தினின்றும் புறப்பட்ட காவிரி நதி, பல காதவழி கடந்து சந்தன மரம் முதலிய விருட்சங்களையும், யானைத் தந்தம், பொன் முத்து முதலிய உயர் பொருட்களையும் வாரிக்கொண்டு கீழ்த்திசை நோக்கிச்சென்றது. புண்ணியம் மிக்க தமிழ் நிலத்துக்கு மேலும் புண்ணிய வளமூட்டியது. தமிழ் மக்களின் வயிற்றுக்கு உணவு படைக்கும் மரகத வயல்கள் காவிரியின் அருளி[illegible] தோன்றுவதோடு, உள்ளத்துக்கு உணவு படைக்கும் தெய்[illegible] திருக்கோயில்களும் இனி இந்தக் காவிரியின் இரு கரை[illegible] லும் எழும்பி மகோன்னதமாக நிற்கப்போகின்றன.

யின்றேல் தமிழகத்துக்குப் பொருளாதாரமும் இல்லை; அருளாதாரமும் இல்லையன்றோ?

இந்திரன் தவம் செய்து கொண்டிருந்த சீர்காழிப்பதியைக் காவிரியடைந்தது. காவிரியைக் கண்ட இந்திரன் துன்புற்று வெந்த தன் உள்ளத்தில் அமுதப் பெருக்காகிய காவிரி பாய்வதே போல் கவலை நீங்கினன். ஈசனுக்காக அவன் வளர்த்த நந்தவனத்தில் தேவி காவிரி பாய்ந்து காய்ந்த செடிகளுக்குப் புத்துயிர் ஊட்டினாள். திவ்விய மலர்கள் மீண்டும் புஷ்பித்தன. அமரேசன் காலந்தோறும் மலர் கொய்து பரமேசனுக்கு வழிபாடு செய்து கொண்டிருந்தான்.

இதேபோதில் சூரபன்மனின் கொடுமையால் வருந்திய தேவர்களும் சீர்காழிப் பதிக்கு வந்து சேர்ந்தனர். இந்திரனின் அடிகளில் விழுந்து வணங்கி, "எங்கள் அரசே! அறநெறி சிறிதும் இல்லாத அசுரர்கள் வசத்தில் எங்களை விட்டு விட்டு இப்படி தேவியாரோடு மட்டுமாக இங்கு வந்து விட்டீர்களே, இது தகுமா? எங்களைக் காக்க வல்லவர் தாங்களே அல்லவா? மன்னவனாகிய தங்கள் கடமையன்றோ மக்களாகிய எங்களைப் பரிபாலிப்பது? புரந்தரனே! எமைப் புரந்திடாமல் இப்படி வெளியேகலாமா? தாரகன் என்னும் மத்தகஜம், சிங்க முகன் என்னும் கொடிய சிங்கம், சூரன் என்னும் வெம்புலி—இவற்றிடம் தேவர்களாகிய பசுக்களைக் காட்டிக் கொடுத்து விட்டுத் தாங்கள் மறைந்து வந்திருப்பது நன்றோ? நாங்கள் சூரபன்மனுக்கு ஊனும் மீனும் சுமந்து, மானங்கெட்டு ஞானம் கெட்டு உழல்கிறோம். வேதங்களை மறந்தோம், சீலமும் சிவ பூஜையும் எங்களை விட்டு நீங்கி விட்டன. அமரபோகம் நீங்கியதற்காக வருந்தா விடினும் ஆன்மபோதத்தை இழந்த துயரத்தை தாள முடியவில்லை. இனியும் எங்களால் துன்பப்பட முடியாது. எங்கள் இடர் நீங்க ஓர் உபாயம் தாங்கள்தான் காண வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார்கள்.

இந்திரன் கலங்கினன். நீண்ட நேரம் யோசித்தான். ர்ந்து பெரு மூச்சு விட்டான்.

"என் அருமைத் தேவர்காள்! சூரபன்மன் அளப்பரும் செய்திருக்கிறன். அவனால்தான் நமது வாழ்வும் வலிவும் என்னால் எதிர்க்க வொண்ணாத அந்தப் பாவி தீய

எண்ணங் கொண்டு அயிராணியைக் கைப்பற்றவும் என்னைச் சிறையிலிடவும் கருதிப் பல அசுரர்களை ஏவினன். அவனுடன் போரிட முடியாது என்று கண்ட பின் நான் இந்திராணியுடன் இங்கு மறைந்து வந்தேன். என்னல் வேறொன்றும் செய்வதற்கு இல்லாததால் நீங்களும் அறியாமல் இங்கு வந்து சேர்ந்தேன். நமக்கு நலம் உண்டாக வேண்டுமானால் ஈசுவரன் அநுக்கிரகத்தாலேயே அது கிட்டவேண்டும். இதன் பொருட்டு சிவத்தைப் பேணித் தவத்தைச் செய்து கொண்டிருக்கிறேன். இனி நாம் எல்லோரும் திருக்கயிலாய மலைக்குச் சென்று சிவபெருமானைத் தரிசித்து நம் குறைகளை முறையிடுவோம், வாருங்கள்'' என்றான்.

தேவர்கள் மழை கண்ட பயிர் போல் மகிழ்ந்தனர். ''அரசே! இப்போதே நாம் கைலாய நாதனைக் கண்டு குறையிரந்து வருவோம்'' என்று ஆர்வத்துடன் கூறினார்கள். இந்திரன் தேவர்களைச் சிறிது நேரம் அங்கேயே இருக்கச் சொல்லி, இந்திராணி இருக்கும் இடத்துக்குச் சென்றான்.

''பெண்ணரசியே! தேவர்கள் இங்கு என்னிடம் வந்து தங்கள் குறைகளைக் கூறி முறையிட்டுக் கொண்டார்கள். நம் துன்ப நீக்கத்தின் பொருட்டு நான் தேவர்களுடன் கயிலை மலைக்குச் செல்கிறேன். விடை தருக'' என்று இந்திரன் கூறினன்.

இந்திரன் கூறியதைக் கேட்ட இந்திராணி பாணம் ஏறுண்ட மயில் போல் மயங்கினள். அவளை இந்திரன் அன்போடு எடுத்து மயக்கம் தெளிவித்தான்.

''ஐயனே! நான் பொன்னுலகப் பெருவாழ்வை விட்டு மண்ணுலகம் வந்தும் தங்களுடன் இருப்பதால்தான் மகிழ்ச்சி குன்றாமல் இருக்கிறேன். தாங்கள் இங்கிருந்து என்னைப் பிரிந்து சென்றால் என்னல் உயிர் வாழ முடியுமா? சக்கரவாகப் பட்சிக்குச் சந்திரனும், வானம்பாடிக்கு மேகமும் துணையாயிருப்பது போல் எனக்குத் தாங்கள்தானே துணை? பிரிவாற்றாமை தாங்காது தவிப்பேன் என்பதோடு, தாங்கள் இல்லாத போது கொடிய அவுணர்கள் வந்து துன்புறுத்தவும் கூடும். நம் புதல்வன் சயந்தனும் இங்கு இல்லை; ஐராவதமும் இல்லை. வேறு பணிப் பெண்களும் இல்லை. பழிக்கு அஞ்சாத

பாவங்களுக்கு உறைவிடமானோருமாகிய அவுணர்கள் என்னை அபகரிப்பார்கள். என்னை விட்டுச் செல்லாதீர்கள். நானும் உங்களுடன் வருகிறேன்'' என்று இந்திராணி நடுங்கிக் கொண்டே கூறினாள்.

அயிராணி கூறியவற்றைக் கேட்ட இந்திரன் சிறிது நேரம் யோசித்தான். பின்னர், ''அன்புக்குரியவளே! வருந்தாதே. உனக்குத் துணையில்லை என்று கலங்க வேண்டாம். சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் புதல்வராக உதித்த ஐயனார் நமக்கு ஒப்பற்ற காவலாக இருக்கிறார். அவரைத் தியானித்தால் இங்கு எழுந்தருளுவார். அவரிடம் உன்னை அடைக்கலமாகக் கொடுத்து நான் செல்கிறேன். அவர் உன்னைக் காத்தருள்வார். அஞ்ச வேண்டாம்'' என்று கூறினான்.

''சுவாமி! திருமாலுக்கும் சிவபெருமானுக்கும் மகவு உதித்ததா? எப்போது? ஐயனாருடைய வரலாறு யாது? அடியேனுக்குச் சொல்லுங்கள்'' என்று தேவராணி ஆச்சரிய ஆர்வத்துடன் வினவினாள். ஐயனாரின் வரலாற்றைக் கூறத் தொடங்கினான் இந்திரன்.

''முன்பு திருமாலை முன்னிட்டுக் கொண்டு தேவர்கள் அமிர்தம் விரும்பிப் பாற் கடலைக் கடைந்த கதை நீ அறிவாயல்லவா? அப்போது ஆலகால விடம் எழுந்ததும், அதனைக் கண்டு தேவர்கள் அனைவரும் அஞ்சி நடுநடுங்கி ஓடியதும் உனக்குத் தெரிந்தவைதானே? நாங்கள் திருக்கயிலாய மலை சென்று சிவபெருமானைத் தஞ்சம் அடைந்து முறையிட்டுக் கொள்ள, கருணையே உருவான கண்ணுதற் கடவுள் பாற் கடலினின்று எழுந்த ஆலகால விடத்தைத் தாமே உண்டு கண்டத்தில் அடக்கிக் கொண்டு தேவர்களுக்குத் திருவருள் பாலித்த அருட் சரிதையும் நீ அறிவாய். பின்னர் தேவர்கள் தொடர்ந்து பாற்கடலைக் கடைய அமுதப் பொற்குடம் அதனின்று எழும்பியது. அமிர்தம் உண்ணுவதில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் போர் மூண்டது. திருமால் மூவுலகமும் விரும்பத் தக்க வண்ணம் மோகினி வடிவம் எடுத்தார். அம் மோகினி வடிவைக் கண்ட அசுரர்கள் அவளது அழகில் மயங்கி, காமப் பித்துக் கொண்டு அமிர்தத்தை மறந்தார்கள்.

தேவர்களும் மோகினியின் மீது மையல் கொண்டார்கள். ஆம்! பெண்ணாசை யாரைத்தான் விட்டது?

'எண்ணு அவுணர் தொகையல்லயதை எந்தை மாயம்
உண்ணுடு வானோர் களும்பெண்மயல் உற்று நின்றார்;
மண்ணாசை தன்னில் பொருளாசையின் மாய வாழ்க்கைப்
பெண்ணாசை நீங்கல் எளிதோ பெரியோர் தமக்கும்?

தேவர்களும் அசுரர்களும் காமத்தால் மயங்கி நின்ற போது, மோகினி வடிவம் கொண்ட திருமால் அவர்களை நோக்கி, "உங்கள் சண்டையை விடுங்கள். இங்கு நான் இருக்கிறேன்; அமிர்தமும் இருக்கிறது. இவ்விரண்டில் நீங்கள் எதையாவது ஒன்றை விரும்பி எடுத்துக் கொள் ளுங்கள்' என்று கூறினார். பெண் மோகம் யாருக்குமே இயல்பு. எனினும் விவேகமுடன் முடிவெடுக்க ஒரு வாய்ப்பு உண்டா னால் அறிவுடையோர் பெண்ணாசையைத் தள்ளி விடுவார்கள். அமரர்கள் இவ்வாறே மோகினி ஆசையைமறந்து அமிர்தத்தை வேண்டினர். எக்காலும் திருந்தாத அசுரர்களோ பெண் பித்துப் பிடித்து, "மோகினியே வேண்டும்" என்றார்கள். மோகினி அசுரர்களைப் பார்த்து, "உங்களில் வீரன் யார்?" என்று வினவினாள். அசுரர்கள் ஒவ்வொருவரும் "நானே வீரன்; நானே வீரன்" என்று போட்டி போட்டுக் கொண்டு முன்வந்தார்கள். இதனால் அசுரர்களுக்குள்ளேயே சண்டை மூண்டது. அச் சண்டையில் ஒருவரை ஒருவர் தாக்கிக் கொண்டு அழிந்து போனார்கள்.

"திருமாலின் மோகினி வடிவ மாயத்தை அறிந்த அசுரர் களில் இருவர் மட்டும் சண்டையில் இறங்காமல் தேவ வடிவங் கொண்டு அமரர்களுடன் கலந்து நின்றார்கள். திருமால் மோகினி வடிவம் நீங்கித் தேவர்களிடம் சென்று அமிர்தத்தைப் பகிர்ந்தளித்தார். அமரர் வடிவிலிருந்த அசுரர் இருவரும் அமிர்தத்தைத் தேவர்களுக்கு முன்னதாக உட்கொண்டனர் அதனைக் கண்ட சூரிய சந்திரர் 'இவர்கள் அமரர்கள் அல்லர்' என்று திருமாலுக்கு உணர்த்தினார்கள். திருமால் தன் கையி லிருந்த அகப்பையினால் அவர்கள் தலையில் அடித்தார். அத அவர்களின் தலை துண்டாகியது. அமிர்தம் கண்டத்தை ... யும்போது தலை முண்டத்திலிருந்து துண்டானதால் அவர் ...

உடல்கள் அழிந்தபோதிலும் தலைகள் அழியாமலிருந்தன. "நீங்கள் அமிர்தம் உண்டதால் விண்ணுலகில் இருக்கத்தகுந்தவர்கள்; நீங்கள் இருவரும் கிரகங்களாகுக" என்று திருமால் பணித்தார். அதன்படி அந்த அசுரர்கள் இருவரும் இராகு, கேது என்னும் கிரகங்களாயினர். தேவி! இக்கதை யாவும் நீ முன்பே அறிந்திருக்கக் கூடியதுதான். இனி நீ அறியாத கதையைச் சொல்கிறேன்.

தேவர்களுக்கு அமிர்தம் பகிர்ந்தளித்த பின் திருமால் தாம் முன்பு கொண்ட மோகினி வடிவுடன் பாற்கடலின் கரையில் இருந்தார். சிவபெருமானுக்கு நால்வகைச் சக்திகள். பராசக்தி மாயகாரிய சம்பந்தத்தால் நான்கு வகையாகித் திருவருள் புரிகிறாள். உலகை உற்பத்தி செய்யும் ஜகன்மாதாவாக இருக்கும்போது சிவபெருமானுக்குத் தேவியான பார்வதியாகவும், அன்பு கொண்டு உலகை ரட்சிக்கும்போது திருமாலாகவும், கோபங் கொண்டு உலகைப் பட்சிக்கும்போது காளியாகவும், நன்மையை நிலைநாட்டுவதற்காகச் சமர் புரியும்போது துர்க்கையாகவும் விளங்குவாள்.

ஏகைவ சக்தி; பரமேச்வரஸ்ய
ப்ரயோஜநார்த்தாய சதுர்விதாபூத்
போகேபவாநீ புருஷேஷு விஷ்ணு:
க்ரோதேச காளீ ஸமரேச துர்கா

தம் சக்திகள் நால்வரில் திருமாலும் ஒரு சக்தியாயிருப்பதை நம்மனோர்க்குத் தெரிவித்தருளும் பொருட்டு, சிவபெருமான் பெருவனப்புடைய திருவடிவம் தாங்கித் திருப்பாற் கடலருகே வந்தார். அவரைக் கண்டு திருமாலாகிய மோகினி மாலாகி மையலுற்றாள். மின் சக்தி புவியில் பாய்வது போல் சக்தி சிவத்தினுள் பாயவே துடிக்கும். அண்ட சராசரங்களுக்கு உள்ள ஆகர்ஷணத்துக்குக் காரணமே சிவத்துக்கும் சத்திக்கும் உள்ள பரஸ்பர ஆகர்ஷணம்தான். அந்த ஆகர்ஷணத்துக்கே அன்பு என்று பெயர். கணவன் மனைவியிடையும், மாதா மக்களிடையும், தோழர்களிடையுமுள்ள அன்புக்கெல்லாம் ஊற்று சிவ சக்தியின் பரஸ்பர அன்பேயாகும். சக்தியாகிய திருமாலிடம் சிவபெருமான் ஈர்க்கப்பட்டார்.

"நின் வடிவம் எத்துணை இனிது, மோகினி!" எனக் கூறி அவளை அணுகினார்.

நாணமடைந்த விஷ்ணு, "உலக மாதாவாகிய உமையம்மையார் என்றும் தங்களைக் காதலித்திருக்கத் தேவரீர் என்னை விரும்புவது ஏன்? முன்னொரு நாள் பங்கயனுக்குப் படைப்புத் தொழில் கைகூடும் பொருட்டுப் பார்வதி தேவியாருடன் தாங்கள் சேரும்படி வேண்டிக் கொண்டேன். ஆனால் துறவித் தெய்வமாகிய தேவரீருக்கு உமையம்மையாரிடத்தும் சிருங்கார நாட்டமில்லை. மேல் நோக்கிய வீரியம் உடைய தேவரீர் அடியேனைக் கருதி வந்த காரணம் யாதோ? தேவரீரது அற்புத விளையாட்டை அறிய வல்லவர் யாவர்?" என்று வியந்து கூறினார்.

"மோகினி! நீயும் நமக்கு ஒரு சக்தியே. அன்று யாம் பிட்சாடனராகத் தாருகாவனத்திற்குச் சென்று முனி பத்தினிகளைக் கவர்ந்தபோது நீயும் ஒரு பெண்ணாகி முனிவரைக் கவர்ந்து ஞானமளித்ததை மறந்தனையா? பழைய நான்முகன் இறந்து போனதும் நம்மை அடைந்து பிரம்மனைப் பெற்றதையும் மறந்தனையா?" என்று கூறித் தமது பொற்கரத்தை நீட்டி மோகனசுந்தரியைப் பிடிக்கச் சென்றார் சிவபெருமான். நாணி ஓடினாள் மோகினி. அரனார் அவளைத் தொடர்ந்து சென்றார். நாவலந் தீவில் வடதிசைக் கடலோரத்தில் உள்ள சால விருட்சத்தின் நிழலில் மணியும் ஒளியும் இணைந்தன. சிவமும் சக்தியாகிய திருமாலும் இணைந்தன!"

[கண்டகி நதி அங்கிருந்து பிரவகித்தது. அதன் நீரில் வச்சிரதந்தி என்னும் ஜீவராசிகள் உள்ளும் புறமும் சக்கரக் குறியுடன் பொன் வண்ணமாய் உதித்தன. அவை மண்ணினால் கூடுகளை உண்டாக்கி, அதிலேயே வாழ்ந்து மடியும்; அவை மடிந்த பின் அந்தக் கூடுகள் சக்கரக் குறியுடன் காணப்படும். அவற்றை ஆற்றோட்டம், கரையில் கொண்டு வந்து ஒதுக்கி விடும். உலகிலுள்ளோர் அவற்றை எடுத்துச் சென்று உள்ளே இருக்கும் பொன்னை எடுத்து அடையாளங்களைப் பார்த்து, இன்ன இன்ன மூர்த்தம் என்று உணர்ந்து விஷ்ணுவாக பாவித்துப் பூசிப்பார்கள். அந்த மண் கூடுதான் சாளகிராமம்.]

இந்திரன் தன் தேவியிடம் கதையைத் தொடருவான்

"அரியும் அரனும் அன்பில் லயித்தபோது, கரிய மேனியும், சிவந்த சடையும், செண்டு தரித்த கையுமாய் ஒரு குமாரர் அவதரித்தார். அப் புதல்வருக்கு ஹரிஹரபுத்திரர் என்று அரனார் நாமம் சூட்டிப் பல வரங்களைத் தந்து உருத்திரர்களுக்குள் ஒருவராக்கினார். ஒரு புவனத்தை நல்கி தேவர்களும் முனிவர்களும் வணங்கும் முதன்மையும் தந்தார். ஹரிஹர புத்திரரே, சாஸ்தா என்றும் ஐயனார் என்றும் ஐயப்பன் என்றும் திருநாமங்களைப் பெற்றார்.

சாஸ்தா உதிக்க வேண்டுமென்றேதான் அரனும் அரியும் ஒன்றுயினர். எனவே ஐயப்பன் அவதரித்தவுடன் திருமாலுக்கும் ஐயனாருக்கும் விடை தந்து மறைந்தருளினார் துறவித் தெய்வமான சிவபெருமான்.

சசிதேவி! ஹரிஹர புத்திரர் தமது புவனத்தில் பூத கணங்களுடன் இருப்பார். விண்ணவரும் மண்ணவரும் விரிஞ்சனும் வணங்கும் விசிட்டமுடையவர் அவர். விஷ்ணுவாலும் புகழத்தக்கவர் அவர். அவர் உன்னைக் காத்தருள்வார்" என்று இந்திரன் கூறினான்.

ஐயனாரின் பெருமையைக் கேட்டு மகிழ்ந்த இந்திராணி சீர்காழியிலேயே தங்கியிருக்க உடன்பட்டாள்.

இந்திரன் ஐயப்பனைத் தியானித்தான். அவர் பூத கணங்கள் சூழ வெள்ளை யானைமீது பூரணை, புட்கலை என்ற தேவியர் சமேதராய் அங்கே பிரசன்னமானார். அவரை வணங்கிய இந்திரன், "எம்பெருமானே! சிவபெருமானிடம் சூரன் கொடுமையை விண்ணப்பிக்கும் பொருட்டு அடியேன் தேவர்களுடன் திருக்கயிலாயம் செல்கிறேன். நான் சென்று திரும்பி வரும் வரையில் இவளைத் தங்களிடம் அடைக்கலமாகத் தருகின்றேன். தமியேன் போய் வரும்வரை இவளைக் காத்தருள வேணும்!" என்று வேண்டினான்.

"அமரபதி! அஞ்ச வேண்டாம். இந்திராணிக்குத் துன்பம் வராமல் யாம் காத்து நிற்போம். நீ கயிலைக்குச் செல்க" என்று ஐயனார் பணித்தருளினார்.

தமது வீரருள் வாட் போரில் நிகரற்ற மகா காளரை ...க்கி "இந்திரன் திரும்பி வரும் வரையில் தனித்திருக்கும் ...வியைக் காத்து நிற்பாய்" என்று கட்டளையிட்டார்.

...மரர் கோன் அயிராணியிடம் விடைபெற்றான்.

# அன்னப்பேடும் இராசாளியும்

இந்திரன் தேவர்களை அழைத்துக் கொண்டு திருக் கயிலாய மலையைச் சென்றடைந்தான். முதல் வாயிலை யடைந்ததும் திருநந்தித் தேவரை வணங்கித் தன் குறைகளைக் கூறினான்.

"சிவபெருமான் சனகாதி முனிவர் நால்வருக்கும் மௌன நிலையை உணர்த்திக் கொண்டிருக்கிறார். ஆகவே, இத் தருணம் அங்கு யாரும் செல்லக் கூடாது" என்றார் நந்தி தேவர்.

சென்ற இடமெல்லாம் தோல்வியாயிற்றே என இந்திரன் மிகுந்த வேதனை அடைந்தான். நந்தி தேவரை வணங்கிக் கூறினான்: "எந்தையே! சூரபன்மனுக்கு அடிமை செய்து இளைத்தோம். எங்கள் குறைகளை ஈசுவரனிடம் முறையிடவே வந்தோம். எங்கள் வேண்டுகோளை இறையவர் செவிமடுத் தாராகில் அவரது கருணைப் பண்புக் கேற்ப சூரனை உடனே சம்ஹாரிக்க வேண்டியிருக்கும். அவ்வாறு அவர் சூரபன்மனை அழித்தால் அவனுக்கு முன்பு தாமே கொடுத்த வரத்தையும் அழித்ததாகும். சத்திய ஸ்வரூபமான சர்வேசுவரனே சொல் தவறினார் என்று ஏற்படும். மாறாக நாங்கள் விண்ணப்பம் விடுத்த பின்னும் எங்கள் அல்லலை அகற்றவிட்டாலோ அருள் வள்ளல் என்று இறைவர் பெற்றுள்ள புகழுக்கு இழுக்கு உண் டாகும். ஆதலால்தான் நாங்கள் வேண்டுகோள் விடுத்து அவரை இக்கட்டில் ஆழ்த்தக் கூடாது என்றே மோன நிலை யில் வீற்றிருக்கிறாரோ?" என்று புலம்பினான் இந்திரன்.

இறைவனின் லீலையை யாரே அறிய வல்லவர்? காவிரி யைத் தருவித்துக் கங்காதரனுக்கு அபிஷேகித்த இந்திரனும் ஐயனுடைய திருவிளையாடலைப் புரிந்து கொள்ளும் அறிவு பெறவில்லை. இறைவனின் செயலில் ஒன்றுக்கொன்று முரணான இழைகள் ஒருபோதும் மோதிக்கொள்ள மாட்டா. கோடானு கோடி அண்டங்களை ஆண்டவன் அம்மானையாடும்போதும் அவை சிறிதேனும் கதி தவறாமல், ஒ டொன்று மோதாமல், உரசாமல் சீராகச் செல்வதே

இறைவனின் திரு உள்ளத்தில் உள்ள கருத்துக்கள் அனந்த கோடியாயினும் அவை முரணின்றியே செயல்படும். சூரனுக்குத் தந்த வரமும், அமரருக்குப் புரிய வேண்டிய அருளும் ஒன்றுக்கொன்று முரணுமோ எனத் தேவர்கோன் திகைத்தான். ஆயினும் ஒன்று மறந்தான். கருமப்பயன் முடிவுறக் காலம் என்ற பெயரில் இறைவன் அமைத்துள்ள வித்தைப் பொருள், தான் நினைத்த முரண்களைத் தீர்க்குமென்பதை மறந்தான். கருமப்படி, தட்சன் வேள்வியில் தேவர்கள் சிவ அபசாரம் செய்ததற்கு ஈடாக அபராதம் செலுத்த வேண்டியவர்கள். அதே கரும விதிப்படி, அளவற்ற தவமியற்றிய சூரன் அகிலாண்ட அதிகாரம் பெற உரிமை பெற்றவன். தேவர்களின் தீய கருமப் பயனையும், சூராதியவுணரின் நற்கருமப் பயனையும் இறைவர் ஒன்றோடொன்று இழைய விட்டார். தேவர்களுடைய தீய கருமப் பயன் முடியும்போதே, அசுரரின் நற்கருமப் பயனும் முடிய வேண்டுமென எண்ணம் கொண்டார். அந்த நாள் வருவதற்கு இன்னும் காலம் இருந்தது. எனவேதான் தேடி வந்த தேவருக்குத் தரிசனம் தராதிருந்தார் தயாநிதி! எல்லையற்ற துன்பமுற்ற இந்திரன் காலம் பிறக்கவில்லை என்பதை மறந்து மனமிடிந்து போனான். இமையவருடன் வெள்ளியம்பொருப்பில் ஒரு புறத்தில் காத்திருந்தான்.

* * *

இந்திரன் திருக்கயிலை சென்ற பிறகு அவன் நினைத்துச் சென்ற காரியம் இனிது நிறைவேறும் பொருட்டு இந்திராணி சீர்காழி வனத்தில் தவம் செய்து கொண்டிருந்தாள். இந்திரன் நெடுநாட்களாகியும் திரும்பி வரவில்லை. கணவன் வராததால் தேய்பிறைச் சந்திரன்போல் தன் உடல் தேய, அழலிடைப்பட்ட மெழுகு போல் உள்ளம் உருகிக் கொண்டிருந்தாள் இந்திராணி.

இந்திராணிக்கு நேர் எதிரான ஒரு படைப்பு அசமுகி. றுமை, நாணம், கற்பு, ரூப சௌந்தரியம் யாவற்றிலும் திராணிக்கு மறு துருவம் அசமுகி. இந்திராணி அன்னம் எனில் அசமுகியோ கோர இராசாளி.

ன்னப்பேட்டிடம் இராசாளி வந்து விட்டது!

அசமுகி தன்னுடைய தோழி துன்முகியுடன் சூலப் படையை ஏந்திச் சுற்றி வரும்போது இந்திராணி இருக்கும் கந்தவனத்துக்குள் வந்து விட்டாள்!

தவம் செய்து கொண்டிருந்த சசிதேவியைக் கண்டதும் அரக்கருக்கே உரிய இழுக்கான எண்ணம் அசமுகிக்குத் தோன்றியது. 'என் தமையனாகிய சூரபன்மனுக்கு அஞ்சித் தான் இந்திராணி தேவருலகிலிருந்து ஓடி ஒளித்து இங்கு தவம் செய்து கொண்டிருக்கிறாள். இவளைத் தேடிப் பிடித்து வருவதற்காகவே அண்ணன் பல ஆட்களை அனுப்பி யிருக் கிறான். இப்போதோ நானே இவளைக் கண்டு பிடித்து விட்டேன். இவளும் தனியாக இருக்கிறாள். இவளைக் கவர்ந்து கொண்டு போய் அண்ணனுக்கு அளிப்பேன்' என்று எண்ணினாள்.

இந்திராணியை அணுகினாள் அசமுகி. பூசை வேளையில் பேயாக எதிரே நின்ற அவளைக் கண்ட இந்திராணி அஞ்சி நடுங்கி எழுந்தோட முயன்றாள்.

"நில்!" என்று அதிரக் கூறியவாறு எதிரே வந்தாள் அசமுகி. அச்சத்தில் நடுங்கும் அழகு மங்கையைக் கண்டதும் அவளுக்கும் சிறிது மனம் இரங்கிற்று போலும்! ஆதரவாகப் பேசுவதே போலச் சொன்னாள்: "இலட்சுமியும் கண்டு பொறாமைப்படத் தக்க இலட்சணவதியான நீ ஏன் உன் னுடைய இளமையை வீணாக்கித் தவம் செய்து கொண்டிருக் கிறாய்? நாட்டை இழந்து ஓடிவிட்ட இந்திரன் உனக்கேற்ற கணவன் அல்லன்; ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் தலைவனாகிய சூரபன்மனே உனக்குத் தகுந்த மணாளன். அவனும் உன்னை விரும்பித் தவம் புரிகிறான். அற்பனாகிய இந்திரனை வெறுத்து அருமை பெருமை யுடைய என் அண்ணன் சூரபன்மனைக் கணவனாக அடைவாய். என்னோடு விரைந்து என் அண்ணன் நகருக்கு வந்து அரியணை ஏறுவாய்" என்று கூறினாள்.

அசமுகியின் சொற்களைக் கேட்ட இந்திராணி இடி யேறுண்ட மயில் போல் செயலிழந்து கலங்கி நின்று பதிவிரதா தருமத்தைப் பழுதின்றிக் காத்து வரும் தன்ன களில் இத்தகைய கடுஞ்சொல் விழலாயிற்றே என்றெ

செவிகளைப் பொத்திக் கொண்டாள். சிறிது போதிலேயே தேவராணிக்குரிய கம்பீரமும், கடுங் கோபமும் கொண்டு, அசமுகியை நோக்கிக் கூறினாள்: "அடி பேதாய்! பெண் குலத்தின் பெருமையை அழிக்கவே நீ பிறந்தாய் போலும்! தீதில்லாத கற்புடைய நான் தேவர் கோமானைத் தவிர ஏனையோரைக் கனவிலும் கருதேன். என் மானத்தையும் உயிரையும் காத்துக் கொள்ள எனக்கு எங்கும் காவல் உண்டு. நீ இங்கிருந்து விரைந்து செல்லாவிடில் அழிந்து போவாய்" என்று கூறினாள். கற்பு என்ற பெருங் காவலோடு ஐயனாரின் அருட் காவலும் இருந்ததால் அயிராணி இவ்வாறு கூறினாள்.

அசமுகி வடலவைத் தீயென வெகுண்டாள். "அறிவற்ற அமரப் பெண்ணே! நான் உன் நன்மைக்காக நல்லது சொன்னேன். அந்த நல்ல வார்த்தைகள் உன் செவிகளில் ஏறவில்லை. மூவுலகாளும் அசுரர்கோனின் உடன் பிறப்பாகிய என்னைத் தாக்கிப் பேசினாய். உன்னை இப்போதே கொன்று தின்றுவிட என்னால் முடியும். எனினும் என் அண்ணன் உன்னை விரும்புகிறான் என்பதால் உன்னைக் கொன்று புசிக்காமல் விட்டு விட்டேன். நீயாக என்னுடன் வராவிடில் நான் உன்னைப் பிடித்து இழுத்துச் செல்கிறேன், பார்!" என்று ஆர்ப்பரித்த அரக்க இளவரசி, இந்திராணியின் திருக்கையைப் பிடித்து இயமன் உயிரை இழுப்பதுபோல் இழுத்துச் செல்ல முற்பட்டாள். பருந்து வாய்ப்பட்ட புள்ளின் பெடையைப் போலத் தவித்த இந்திராணி ஐயப்ப சுவாமியை எண்ணித் துதிக்கலானாள்.

"ஆரணச் சுருதி யோர்சார் அடலுருத் திரனென்று ஏத்தும்
காரணக் கடவுள் ஓலம்; கடல் நிரத்து எந்தாய் ஓலம்;
பூரணைக் கிறைவா ஓலம்; புட்கலை கணவா ஓலம்;
வாரணத் திறைமேற் கொண்டு வரும்பிரான் ஓலம்"

என்றாள்

இந்திராணியின் பிரார்த்தனை ஐயனாரின் படைத் தலைவ[illegible]ய வீர மகா காளரை எட்டியது. தேவியைக் காக்கவே [illegible]ரவால் நியமிக்கப்பட்ட மகாகாளர் தமது வடிவாளைச் [illegible]க்கொண்டு அங்கு விரைந்து வந்து நின்றார். இந்தி[illegible]ய நோக்கி, "அம்மே அஞ்சாதே!" என்று அபய

ஹஸ்தம் தந்தார். அவளைப் பற்றி இழுக்கும் அசமுகியைப் பார்த்து இடி முழக்கக் குரலில் "நில்" என்று கட்டளை இட்டார். தன்னை அதட்டிய வீர மகா காளரை அலட்சியமாக நோக்கிய அசமுகி, "மும்மூர்த்திகளே என்னை எதிர்த்து நிற்க மாட்டார்கள். அப்படியிருக்க நீ யார் என்னைத் தடுக்க! இந்திராணியைக் காப்பாற்றவா நீ இருக்கிறாய்? உனக்கு இந்தக் காவல் வேலையைத் தந்தது யாரப்பனே? மூவுலகங்களிலும் ஆதிபத்தியம் செலுத்தும் என் தமையனுக்கு மேலாகக் கட்டளை இட்டது யார் சொல்!" என்று மிடுக்காகக் கேட்டாள்.

"இதோ சொல்கிறேன் கேள். மூவுலகங்களையும் காக்கும் கரிய மேனியன்; அவரது திருநாமம் ஐயன். அவரே எனக்கு இந்தப் பணியைத் தந்துள்ளார்" என்று கூறினார் வீர மகா காளர்.

'தாரணி முதல மூன்றுத் தலையளி புரிந்து காப்பான்;
காரணி செறிந்துற்றன்ன கரியவன்; கடவுள் வெள்ளை
வாரண முடைய ஐயன்; மற்றிது பணித்தான்; என்பேர்
வீரரில் வீர னை வீரமா காளன்' என்றான்.

வீர மகாகாளர் இந்திரனைத்தான் 'ஐயன்' என்றும் 'வெள்ளை வாரண' னென்றும் கூறினார் என்று எண்ணிய அசமுகி, நீயும் அற்ப இந்திரனின் ஆள்தானா?" என்று கேட்டுத் தன் கையிலிருந்த சூலத்தை அவர் மீது எறிந்து அட்டகாசம் செய்தாள். வீர மகாகாளர் அந்தச் சூலத்தைத் தமது வாளால் அநாயாசமாகத் துண்டாக்கினார். உடனே அவள் துன்முகியின் கையிலிருந்த சூலத்தை வாங்கி வீர மகாகாளரின் மார்பை நோக்கி விடுத்தாள். அதனையும் வாளினால் வெட்டி வீழ்த்தினார் மகாகாளர். அசமுகி பின் வாங்கிச் சென்று மலைகளையும் மரங்களையும் பறித்து வீசிப் போர் புரிந்தாள். மகாகாளர் மலைகளை வீசிய மகா பலம் பொருந்திய அசமுகியின் கரத்தையே இலகுவில் துணித்தார். அவளைக் காலால் உதைத்து உருட்டினார். துன்முகியின் கரத்தையும் வெட்டி வீழ்த்தினார்.

உதிர ஆறு பெருக உருண்டாள் அசமுகி. கிலையிலும் அடியுண்ட வேங்கைபோல் ஆறுச் சினம் கொ

"இந்திராணியை உண்பேன்" என்று எழுவாள்; விழுவாள்; உதட்டைக் கடிப்பாள்; துடிப்பாள்; 'தனக்கும் தோல்வியா' என்று எண்ணிப் பெருங் குரலெடுத்து ஓலமிடுவாள். "உலகை யெல்லாம் அழிப்பேன்" என்று சீறுவாள்.

உலகங்களை யெல்லாம் அழித்துவிட எண்ணிய அசமுகிக்கு ஆறுதல் கூறினாள் துன்முகி: "தலைவிப் பெருமாட்டியே! வீர மகாகாளர் உங்கள் கரத்தை வெட்டிய தற்காகப் பூவுலகும் பொன்னுலகும் என்ன செய்யும்? உலகங்களை எல்லாம் இதற்காக அழித்தால் அவற்றுக்குத் தலைவரான சூரபன்மாசுரருக்குக் கோபம் ஏற்படாதா? தங்கள் துயர் துடைக்கத் தமையனார் உள்ள போது தாங்கள் ஏன் பழிவாங்க முற்பட வேண்டும்? தாங்கள் இப்படித் துயர்ப் படலாகாது. இறைவனையும், ஞானிகளையும் தவிர மற்ற உயிர்களுக்கு வாழ்வினையில் உண்டாகும் விளைவு நீங்காது" என்று தேற்றினாள்.

நினைவருங் கண்ணுதல் நிமலற் கேயலால்
அனையனை அடைதரும் அறிஞர்க் கேயலால்
எனைவகையோர்க்கும்எவ் வுயிர்க்கும் ஏற்பதோர்
வினைபடும் இழிதுயர் விட்டு நீங்குமோ?

புராணங்களைத் தந்த முனிவர்களின் பெருமையைப் பாருங்கள். எந்தப் பாத்திரத்தையும் குறித்தும் அவர்களுக்குப் பற்றுக் கிடையாது. சத்தியம் ஒன்றிடம்தான் அவர்களுக்குப் பற்று. கண்ணன் செய்கிற மாயத்தையும் ஒளிக்காது எழுதுவார் வியாசர்; கர்ணன் போன்றவர் செய்கிற தருமத் தையும் தயங்காது கூறுவார். அரக்கியின் தோழியான துன்முகி ஒரு நல்ல வார்த்தை கூறினால், அதையும் வியாசரோ, கச்சியப்பரோ மறைக்க மாட்டார்கள்.

துன்முகியின் நன்மொழி கேட்ட அசமுகி எழுந்தாள். இந்திராணியைப் பார்த்து, "உன்னையும் உன் கணவனையும், எனைய தேவர்களையும் என் அண்ணனைக் கொண்டு கொடிப் முதில் சிறைப்படுத்துவேன். அப்படிச் செய்யாவிடில், சூரபன்மனின் தங்கையல்ல" என்று சபதம் செய்து அவ்விடத்தை விட்டு நீங்கினாள்.

அப்போதைக்குத் தெளிவு பெற்றாலும், பதியின்றிக் கலை மானைப் பிரிந்த பிணை மானைப்போல மனம் பதைத்த இந்திராணி கணவன் கருதிச் சென்ற காரியம் வெற்றி பெற வேண்டும் என்று மீண்டும் தவம் செய்யலானாள்.

* * *

சீர்காழி நந்தவனத்தில் இந்திராணிக்கு நிகழ்ந்த ஆபத்தை யெல்லாம் அறிந்த நாரத முனிவர் திருக்கயிலாய மலைக்கு விரைந்து சென்றார். சிவபெருமானைத் தரிசிப்பதற்கு உற்ற சமயத்தை எதிர் நோக்கியிருந்த இந்திரனிடம் நிகழ்ச்சிகளை எடுத்துரைத்தார். அதனைக் கேள்விப்பட்ட இந்திரன் தனது விதியை நினைத்து வருந்தினான். திருநந்தித் தேவரை வணங்கி, "அரனாரின் தரிசனத்துக்கு உற்ற சமயத்தை எதிர் பார்த்துக் கொண்டு நெடுங்காலம் காத்திருந்தோம். எங்கள் தீவினை காரணமாக இதுவரை நினைத்த காரியம் கைகூடவில்லை. பூவுலகம் சென்று தவம் செய்ய எங்களுக்கு விடை தர வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான். திருநந்தித் தேவர் மனமுவந்து விடை கொடுத்தனுப்பினார்.

இறைவன் எங்குமே இருப்பவர். அடியாரின் பாவனை முதிரா விட்டால் அவரைக் கைலாயத்திலும் காண முடியாது; பாவனை முதிர்ந்தாலோ சீர்காழியில் என்ன, எங்குமே அவரைக் கண்டு விடலாம்.

இந்திரன் மற்ற தேவர்களோடு சீர்காழிக்கு வந்தான். அயிராணியைக் காத்து நின்ற மகாகாளரை அன்புடன் தழுவிக்கொண்டு பல இனிய மொழிகளைக் கூறி ஐயனாரிடம் அனுப்பி வைத்தான். பின்னர், தவம் செய்து கொண்டிருந்த தாரத்திடம் சென்று அவளது தாபத்தை நீக்கினான்.

சூராதியவுணர் படைகள் எந்த நொடியிலும் சீர்காழிக்கு வந்துவிடக் கூடிய ஆபத்தை இந்திராணி இந்திரனுக்கு உணர்த்தினாள். அவ்விடத்தை விட்டு நீங்குவதே முறை என இந்திரன் கண்டான். இந்திராணியையும் மற்ற தேவர்களையும் அழைத்துக்கொண்டு மேரு மலையிற் போய் மறைந்திருந்தான்.

இந்திரனேயாயினும் வேறு யாராயினும் வினைப் விடாதல்லவா?

# விநாசத்துக்கு விதைத்த வித்து!

நிறைமதியை நிகர்த்த இரு வெண்கொற்றக் குடைகளின் நிழலில் சூரபன்மன் அரசு வீற்றிருந்தான். அருமைச் சகோதரர்கள் தாரகனும் சிங்கமுகனும் இரு பக்கங்களிலும் வீற்றிருந்தார்கள். புதல்வர்களும் அமைச்சர்களும் அருகில் அமர்ந்திருந்தனர். முன்பு தேவசபைக்கு அழகூட்டிக் கொண்டிருந்த ஊர்வசி, அரம்பை, திலோத்தமை முதலிய தேவ மாதர்கள் இப்போது அசுர அரசனின் சபா மண்டபத்தில் நடனமாடிக் கொண்டிருந்தனர். பஞ்சாங்கம் சொல்லுவதற்கு ஏற்ற சமயத்தை எதிர்நோக்கிக் கொண்டு பிரம்மதேவர் நின்று கொண்டிருந்தார். அசுரர்களின் கொடுமைகளுக்குள்ளாகி நிர்ப்பந்தமாக ஆசி கூற வேண்டிய நிலையில் இருந்த முனிவர்களும் சூரனை வாழ்த்தச் சமயம் எதிர்பார்த்து ஒரு பக்கம் ஒதுங்கி நின்றார்கள். தீபத் தட்டுகள் ஏந்திய பெண்கள் பலர் சூரபன்மனுக்குப் போற்றி கூறினர். கின்னரரும், கிம்புருடரும், சித்தரும், கந்தருவரும் மங்கலம் ஓதிக் கொண்டிருந்தார்கள். திக்குப் பாலகர்கள் சூரபன்மனது வீரத்தையும் வெற்றியையும் துதித்துப் புகழ் பாடிக் கொண்டிருந்தனர். அசுரகுருவாகிய சுக்கிராசாரியர் மந்திரம் ஜபித்து அட்சதை தூவிச் சூரனை ஆசீர்வாதம் செய்து கொண்டிருந்தார்.

இத்துணைச் சிறப்புக்களுடன் சூரபன்மன் அரசு செய்து கொண்டிருந்தபோது அவனது அருமைத் தங்கை அசமுகி வெட்டுண்ட கரங்களிலிருந்து உதிரம் கொட்ட, தோழி துன்முகியுடன் வீரமகேந்திரபுரியின் கீழ்த்திசை வாயிலை அடைந்தாள். வீர மகேந்திரபுரி அழிய வேண்டிய காலம் நெருங்கி விட்டது என்பதை முன்கூட்டியே தெரிவிப்பது போலிருந்ததாம் அவளது வருகை.

தமது இளவரசியை இந்நிலையில் கண்ட அசுரர்கள், "பெரும் பலம் பொருந்திய இவளை இவ்வாறு கொடுமைப் ...த்தியவர் யார்?" என்று அதிசயமும் ஆறுச் சினமும் ...டனர்.

...வளது கைகளை வெட்டியவர் சிவபெருமானோ? ...யோ? ஐயனாரோ? விநாயகரோ? சங்கு கன்னரோ?

குண்டோதரரோ? பானு கம்பரோ? அல்லது இந்திரனோ? இல்லாவிடில் திருமாலேதானோ?'' என வியந்து பேசிக் கொண்டனர். தேவர்கள் யாவரும் சூரனுக்கு அடங்கி விட்ட தால் அவர்களால் அசமுகிக்குத் தீங்கு நேர்ந்திராது என எண்ணி, 'தவ சிரேஷ்டர்களிடம் போய் இவள் ஏதாவது சேஷ்டை செய்திருப்பாள்: அவர்கள் சாபம் தந்திருப்பார்கள்; அதனால் இவளுக்கு இப்படி நேர்ந்திருக்கலாம்' என்று சிலர் பேசிக்கொண்டனர். எனினும், இவ்வாறு அவளுக்குக் கொடுமை இழைத்தது யார் என்று அசமுகியைக் கேட்கமட்டிலும் யாருக்கும் துணிவில்லை.

நகர மாந்தர் அனைவரும் ஆச்சரியமும் ஆத்திரமும் உற்றிருக்க, அசமுகி சூரபன்மன் அரசு வீற்றிருந்த அத்தாணி மண்டபத்தை அணுகினாள். சூரபன்மனின் அவைக்களத்தை யடைந்ததும் அவளுடைய சீற்றமும், துயரமும் எல்லை மீறி விட்டன. பலவாறாகக் கதறினாள்; தாய் தந்தையரை நினைத்துப் புலம்பித் தனக்கு நேர்ந்த துன்பத்தைச் சொல்லி அழுதாள்.

''சகோதரர்களே! நீங்கள் இருந்துமா எனக்கு இந்தக் கதி? உங்களுக்காக அயிராணியைப் பிடித்து இழுத்துவர நினைத்ததன் மீதுதான் வீரமகாகாளன் என் கரத்தை வெட்டி விட்டான். நான் அநாதையாய் நின்றபோது நீங்கள் யாரும் வந்து என்னைக் காப்பாற்றவில்லையே! தேவர்களுக்கு அஞ்சி நீங்கள் ஓடி ஒளிந்து கொண்டீர்களா? என் கரத்தை வெட்டிய போது, தேவர்களை வென்று அடிமையாக்கிக் கொண்டோம் என்று பெருமை பேசிக்கொள்ளும் உங்கள் அகந்தையையும் மகாகாளன் அறுத்து விட்டான். அது மட்டுமல்ல; இனி உங்களையுமே அழிக்கப் போகின்றான். நீங்கள் எனக்கு உடன் பிறந்தவர்களாக இருந்தும் என்ன பயன்?'' என்று ஓல மிட்டாள். தன் வாயினாலேயே அபசகுனம்போல் சோதரரின் அழிவைச் சொன்னாள்.

மருமகர்களை நோக்கினாள். ''நீங்கள் பராக்கிரமசாலி களாக இருந்தும் என் கையைத் துண்டித்தது யார் என்று கேட்காமல் இருக்கிறீர்களே! பழி வாங்கப் புறப்படாமல்

இருக்கிறீர்களே! இது என்ன கொடுமை?" என்று கூறி அழுதாள்.

அரக்கத்தனத்துடன் அறியாமையும் ஆறாத அவமான உணர்ச்சியும் கலந்ததால் அசமுகி தன்னை மறந்து தன் சுற்றத்தை நிந்தித்தாள். அவர்கள் அழிவுக்குத் தன் வாயாலேயே கட்டியம் கூறினாள்.

தாரகாசுரனை நோக்கி, "அண்ணா, திருமால் விடுத்த சக்கரத்தை ஆரமாக அணிந்து கொண்ட தாங்கள், அருமைத் தங்கையின் கரம் வெட்டுண்டது என்ற பழியை ஆரமாகக் கொண்டு விட்டீர்களே. உங்களுடைய பராக்கிரமம் எங்கே பறந்து விட்டது அண்ணா?" என்று புலம்பினாள்.

சிங்கமுகாசுரனைப் பார்த்து, "முன்பு ஒரு முறை தாங்கள் இந்திரனை ஐராவதத்தோடு தூக்கி எறிந்து உதைத்தீர்களே! இன்று தேவரின் ஏவலாள் என் கையை வெட்டியபோது உங்கள் வீரம் எங்கு சென்றிருந்தது?" என்று கதறினாள்.

கடைசியாக அசமுகி, அசுர வேந்தனாகிய சூரபன்மனிடம் சென்றாள். "அண்ணா! அண்டங்களுக்கெல்லாம் அதிபதியான உங்களைக் கண்டு தேவர்கள் யாவரும் அஞ்சி நடுங்குவார்கள். அப்படியிருக்க, அவர்களின் ஏவலாள் ஒருவன் உங்களைக் குறித்துச் சிறிதும் அஞ்சவில்லை. அவன் அஞ்சாததும் நியாயம்தான்! எனக்கு இத்தகைய கோரத்தை இழைத்த பின்னும் அவன் கவலையின்றி உயிர் வாழ்கிறானல்லவா? முன்பு அகத்திய முனிவன் என் குமாரர்களான வில்வலனையும் வாதாவியையும் கொன்றான். அவனும் உயிருடன்தான் இருக்கிறான். எனக்கு உங்களால் ஆதரவு இல்லை. கையிழந்த நான், தன் கையே தனக்குதவி என்றும் இனி வாழ முடியாது. நான் உயிருடன் இருப்பதைவிட இறப்பதே மேல்" என்று கூறிச் சூரபன்மனின் கால்களில் விழுந்து சகடக்கால் போல் உருண்டு கதறினாள்.

அசமுகியின் கண்களிலிருந்து தாரை தாரையாகப் பெருகிய கண்ணீர் சூரபன்மனின் கால்களில் விழுந்ததும் அவனுள் ளிருந்த கோபத்திக்குத் தைலம் வார்த்தது போல் அவனது கண்களில் பொறி பறந்தது, அசுரர்களிடம் சகோதர பாசத் தக் குறையே கிடையாது.

இந்திராணியைத் தனக்கென்று கவர்ந்து வந்த போது தான் தங்கையின் கை வெட்டப்பட்டது என்பதையறிந்த சூரபன்மனின் கண்கள் நெருப்பைக் கக்கின; வாய் புகையை உமிழ்ந்தது; மூச்சு விஷ வாயுவைக் கக்கியது. பற்களால் உதட்டைக் கடித்துக் கொண்டான். அண்டங்களெல்லாம் வெடித்து விடுவது போலப் பெருஞ் சிரிப்புச் சிரித்தான். அவனது புருவங்கள் துள்ளின; உடல் வியர்த்து விட்டது. சூரபன்மனின் சீற்றத்தைக் கண்ட முனிவர்கள் மூலைக்கொருவராக வெருண்டு ஓடினார்கள். திசைக்காப்பாளர்கள் எந்தத் திசை நோக்கிச் செல்கிறோம் என்பதை அறியாது தலைதெறிக்க ஓடினர். நடனமாடிக் கொண்டிருந்த தேவமாதர்கள் நடனமாடியபடியே ஓடினார்கள்; மலைகளும் கடல்களும் கூட சூரனின் கோபாவேசத்தைக் கண்டு நடுக்கம் கொண்டன; விண்ணும் மண்ணும் விலுவிலுத்தன.

சூரபன்மன் பற்களை நறநறவென்று கடித்துக் கொண்டே தம்பியரை நோக்கிப் பேசினான்.

"தேவர்களின் ஏவலாள் ஒருவன் நம் வலிமை மிக்க சகோதரியின் கையை வெட்டினான் என்றால், மனிதர்களுக்கும் இனி நாம் பயந்து வாழும் காலம் வந்துவிடும் போல் இருக்கிறதே! இந்திரனை அற்பமாக நினைத்துச் சிறைக்குள் போடாமல் விட்டேன். அவன் கூரையில் ஒளித்து வைத்திருந்த நெருப்புப் பொறியாகி விட்டான். அசமுகியின் கரத்தை வெட்டியது என் அங்கத்தை வெட்டியதுபோல் இருக்கின்றது. தம்பியராகிய நீங்கள் இருக்க, மக்களிருக்க, கோடானுகோடி சேனையிருக்க தெய்வாஸ்திரங்கள் இருக்க, இந்திரஜாலத்தேரும் இருக்க, இதோ நானும் திரிபுவன சக்கரவர்த்தி என்ற பட்டத்துடன் இருக்கிறேன். மலை போன்ற பஞ்சுப் பொதியை ஒரு சிறு தீப் பொறி அழிப்பது போல இவள் கையிலிருந்து சிந்தும் உதிரத் துளிகள் என் மாபெரும் புகழையும் எரித்துச் சாம்பராக்கி விட்டதே! இந்தப் பழி என்றும் என்னைவிட்டு நீங்காதே அசமுகி துன்பப்படுவதா? அதனைக் கண்டு என் உ... பொறுப்பதா? நன்று நன்று என் அரசியல்" என்று நகைத்தான்.

சூரனின் சொற்களைக் கேட்டதும் அவனது புதல்வன் பானுகோபன் கோபாவேசத்தோடு எழுந்தான்; தந்தையை வணங்கினான். "அப்பா! நமது ஏவலால் வருந்தி இளைத்த தேவராஜனாகிய இந்திரனே எங்கோ மறைந்தான். அவ்வாறிருக்க, தேவர்களில் ஒருவன் அசமுகியின் கரத்தைத் துண்டித்தான் என்பது, மலடி மகன் வானத்தில் பூத்த தாமரையைக் கையால் பிடித்தான் என்பது போல் அல்லவா இருக்கிறது? இதனை ஆராய வேண்டும். இப்போதே சீர்காழி சென்று அத்தையின் கரத்தை வெட்டினவனையும், இந்திராணியையும், இந்திரனையும், மற்ற தேவர்களையும் சிறை பிடித்து வருகிறேன். அவர்கள் அங்கிருந்து மறைந்து விட்டாலும், தேவலோகம் சென்று அதனைக் கொளுத்தித் தேடிப்பார்க்கின்றேன். அங்கு எஞ்சியுள்ள தேவர்களையும், அரம்பையர்களையும் பிடித்துக் கொண்டு வருகிறேன். எனக்கு உத்தரவு கொடுங்கள்" என்று விண்ணப்பித்துக் கொண்டான்.

"படையுடன் செல்க" என்று பானுகோபனுக்கு அனுமதி கொடுத்தான் சூரபன்மன். பானுகோபனுக்கு இடம் காட்டுவதற்காகத் துன்முகியை அனுப்பி வைத்தான். பானுகோபன் தந்தையையும் சிறிய தந்தையரையும் வணங்கிப் புறப்பட்டான்.

இதுவே அவுணர்களின் விநாசத்துக்கு விதைத்த வித்தாகும்.

சூரபன்மன் நான்முகனைக் கூப்பிட்டான். படைப்புக் கடவுள் சூரபன்மன் முன் வந்ததும், திதி, வாரம் கூறத் தொடங்கினார். சூரபன்மன், "உன்னை நாம் அழைத்தது இதற்காக அல்ல" என்று அதட்டி விட்டு, அசமுகியின் வெட்டுண்ட கையை விரைந்து கூடச் செய்வாய்" என உத்தரவிட்டான். நொடிப்பொழுதில் அவ்வாறே செய்தார் படைப்புக் கடவுள். அவர் மற்றவர் தலையில் எழுதுவதாக நாம் குறை கூறுகிறோம். அசுரன் கட்டளையைச் சிரமேல் தாங்கி அரக்கியின் கையைக் கூடச் செய்த போது பிரம்மனுமே தமது தலையெழுத்தை நொந்து கொண்டிருப்பார்!

சூரபன்மன் கிரகங்களையும் நட்சத்திரங்களையும் அழைத்து ...செய்தான். "என் தங்கையின் கையை வெட்டியவன்

யார் என்று ஆகாயத்தில் திரியும் உங்களுக்குத் தெரியாதா? இளவரசியின் கரம் துண்டிக்கப்படுவதைப் பார்த்தும் நீங்கள் வாளாவிருந்தது ஏன்? உங்கள் ராஜ விசுவாசம் இதுதானோ?" என்று கடுகடுத்துப் பேசி, அவர்களை யெல்லாம் சிறையில் அடைத்தான்.

"வாயுவே! நீ எங்கும் நிறைந்திருக்கின்றாய். நீ இல்லாத இடத்தில் உயிர் ஒன்றும் ஒளிந்திருக்க முடியாது. அப்படி யிருக்க,என் தங்கையின் கையை ஒரு வானவன் வெட்டியதைப் பார்த்ததும் நீ ஏன் நம்மிடம் வந்து தெரிவிக்கவில்லை?" என்று முழக்கமிட்டான். வாயு பகவான் வாய் திறவாது நின்றார். அவரையும் சிறைக்குள் தள்ளினான் அசுரன்.

பின்னர், வருஷம், இருது, மாதம் முதலிய காலவரை யறைக்கு உரிய தெய்வங்களையும் சிறையில் அடைத்தான்.

பூவுலகில் உள்ள அரசர்களை யெல்லாம் அழைத்த சூரபன்மன், "விண்ணுலகிலிருந்து ஓடி மண்ணுலகில் மறைந்து வாழ்கின்ற இந்திரனுக்கு உதவியாக ஓர் ஏவலாள் என் தங்கை அசமுகியின் கரத்தை வெட்டி விட்டான். அதைக்கூட உண ராமல் நீங்கள் மயங்கிக் கிடந்தீர்களே, ஏன்?" என்று கோபா வேசமாகக் கேட்டான். தன் தங்கையின் கரம் வெட்டுண் டதை அவர்கள் தடுக்காதிருந்ததற்குப் பிரதியாகச் சில அரசர் களின் நாவையும், நாசியையும், சிலரது செவியையும் அறுத் தான். வேறு சிலரின் கால்களை வெட்டினான். சில அரசர் களின் சிரத்தையே சேதம் செய்தான்.

சூரபன்மன் தண்டனை விதிக்கும் படலம் ஒருவாறாக ஓய்ந்தது. அவனது தம்பியரும் விடைபெற்றார்கள். பிரம்ம தேவர் சிறிது தயங்கி நின்றார். பிறகு தைரியத்தை வரவழைத் துக் கொண்டு "ஒரு சிறு கோரிக்கை! சூரியனும், நட்சத்திரங் களும் மற்ற காலக் கடவுள்களும் தங்கள் கடமையைச்சரிவரச் செய்யாவிட்டால் பிரபஞ்சம் இயங்காது. ஆகவே சிறையில் அடைத்துள்ள அவர்களை விடுதலை செய்ய வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். எக்காரணம் பற்றியோ வேண் கோளுக்குச் சூரனும் இணங்கினான். சூரிய சந்திரனை விடுதலை செய்து, "உங்களை விட்டு விட்டேன். இனி இ

னுடன் சேராமல் கம்கட்டளைப்படி நடந்து கொள்ளவேண்டும்'' என்று உத்தரவிட்டான்.

''தங்கள் உத்தரவுப்படியே செய்கிறோம்'' என்று கூறி அகிலாண்டத்துச் சக்திகளும் அசுரனின் அடிபணிந்து வெளியேறின.

# அபயமளித்தார் ஆறுமுகன்

தந்தையிடம் விடைபெற்றுத் தனது மாளிகைக்கு வந்த பானுகோபன் போருக்குச் செல்வதற்கு ஆயத்தம் தொடங்கினான். தும்பை மாலை அணிந்து, பல்வகைப் படைக்கலங்களை எடுத்துக்கொண்டு, இரண்டாயிரம் குதிரைகள் பூட்டிய தேரில் ஏறிப் புறப்பட்டான். அவனது சேனைகள் சென்ற போது ஏற்பட்ட புழுதியினால் வீரமகேந்திரபுரமே மறைந்தது. பானுகோபன் கடலைக் கடந்து பூமியை அடைந்தான். இடம் காட்டுவதற்காக உடன் இட்டு வந்திருந்த துன்முகியிடம், ''அசமுகி அத்தையின் கைகள் எந்த இடத்தில் வெட்டப்பட்டன?'' என்று கேட்டான்.

துன்முகி அவனைச் சீர்காழி நந்தவனத்துக்கு அழைத்துச் சென்றாள். நந்தவனத்தில் புகுந்தான் பானுகோபன். அவனது சேனைகள் நந்தவனத்தை அழித்தன. நந்தவனமெங்கும் தேடிப் பார்த்தபொழுது இந்திராணியையோ வீரமகாகாளரையோ காணாததால் பானுகோபன் மிகவும் ஆத்திரம் கொண்டான். பூவுலகெங்கும் தனது படை வீரர்களுடன் சென்று தேடினான். அங்கும் அவர்களைக் காண முடியவில்லை; நால்வகைச் சேனைகளுடன் விண்ணுலகம் சென்றான். அதனை அறிந்த தேவர்கள் அஞ்சியோடி இந்திரனின் புதல்வனாகிய சயந்தனிடம் சென்று படையெடுப்புச் செய்தியைத் தெரிவித்தனர். தேவர்களில் பலரும் தேவகுரு வியாழ பகவானும் வராஜனும் விண்ணுலகில் இல்லாத சமயம் அது. எனினும் ந்தன் அசுரர்களை எதிர்த்துப் போரிடுவது என்றே மானித்தான்.

"அசுரர்களிடம் புறங்காட்டி ஓடுவது நமது தன்மானத்துக்குத் தகாது. இவர்களிடம் அடிமைப்பட்டு உயிர் வாழ்வதைவிட எதிர்த்துச் சாவதே மேல். புறப்படுங்கள் போருக்கு" என்று தேவர்களைத் தூண்டினன். அவர்களும் தங்களது அன்புக்குரிய இளவரசனுடன் உற்சாகமாக யுத்தத்துக்கு ஆயத்தம் செய்யலானார்கள்.

சிங்காதனத்தி லிருந்து இறங்கிய சயந்தன் ஐராவதத்தை எண்ணியவுடன் அந்தத் திவ்வியமான வெள்ளை யானை அவன் எதிரில் வந்து நின்றது. அதன் மீது ஏறிக் கொண்ட சயந்தன் தேவர்கள் புடைசூழப் போருக்குப் புறப்பட்டான்.

பானுகோபனின் சேனைக்கு எதிரே தேவர் படை அணி வகுத்து நின்றது. சமர் புரியாமலே அமரர் ஓடி விடுவர் என்று எதிர்பார்த்த அசுரர்களுக்கு வியப்பாகி விட்டது. "நன்றாயிருக்கிறது. நேற்று வரை நம்மிடம் ஏவல் செய்து கொண்டிருந்த தேவர்கள் இன்று நம்மை எதிர்த்துப் போர் செய்ய வந்து விட்டார்களே!" என்று ஆச்சரியமுற்று நின்றார்கள்.

இரு படைகளும் மோதிக் கொண்டன. இரு தரப்பினரும் வேற்படை, வாட்படை, சக்கரம், மழுப் படைகள், முத்தலைச் சூலங்கள், குலிசங்கள் முதலியவற்றைக் கொண்டு கடுமையாகப் போர் புரிந்தனர். உதிரம் வெள்ளம் போல் ஓடியது. நீண்ட நாட்கள் அடிமை வாழ்வு வாழ்ந்து இளைத்திருந்த வானவர்களால் அதிகார பலம் பெற்று மதர்த்திருந்த அசுர கணங்களுக்கு ஈடு கொடுப்பது கடினமாயிருந்தது. போர்க் களத்தினின்று தேவர்கள் ஓடலாயினர். ஓடிய தேவர்களை அசுரர்கள் துரத்திச் சென்று கயிற்றினல் கட்டிப் பானுகோபனிடம் இழுத்து வந்தார்கள்.

தேவர்கள் கயிற்றினல் கட்டி யிழுக்கப்படும் கோரக் காட்சியை வெள்ளை யானை மீது அமர்ந்திருந்த சயந்தன் கண்டான். அவனுக்குத் தன்மானம் பொங்கியது; கோபம் மிகுந்தது. உடலிலுள்ள சக்தியை யெல்லாம் வரவழைத்துக் கொண்டு வில்லை வளைத்து நாணை ஏற்றிப் பாணங்களை மழை போல் பொழிந்தான். அதற்கு எதிராக அசுரர்களும் கோ-

கணைக்கில் பாணங்களை விடுத்தார்கள். தன்னை நோக்கி வந்த பாணங்களையெல்லாம் எதிர்ப் பாணங்களால் தவிடு பொடி யாக்கினான் சயந்தன். கடும் போர் புரிந்து நூறு வெள்ளம் அசுரர்களையும் அழித்தான். பானுகோபனுடைய படைவீரர்கள் பலரை ஐராவதம் காலால் மிதித்து அழித்தது. மற்றும் சில வீரர்களைத் துதிக்கையினால் வாரி வீசியது; சில வீரர்களைத் தந்தத்தினால் குத்திக் கொன்றது; சிலரை வாலினால் அடித்துக் கொன்றது.

அசுர வீரர்களின் தலைவன் நீலகேசன் சயந்தன் மீது நூறு பாணங்களை விடுத்தான். சயந்தனும் நூறு பாணங்களை விடுத் தான். அதனால் நீலகேசனின் கவசம் பிளந்தது. ஆத்திர மடைந்த நீலகேசன் பிறைமுக அஸ்திரத்தைச் சயந்தன் மீது விடுத்தான். இதனால் சயந்தனுடைய வில்லின் நாண் அறுந் தது. சயந்தன் நிராயுதபாணியாகி விட்டான். அஸ்திரசஸ்திர மற்ற சயந்தன் மந்திர தந்திரங்களை நாடினான்; பலவித மாயங் களைச் செய்து போரிட்டான். அந்த மாயங்களை எதிர்த்துப் போர் செய்ய வகையறியாத நீலகேசன் மயங்கி விழுந்து இறந் தான். எஞ்சியிருந்த அசுர வீரர்கள் பல திசைகளிலும் சிதறி ஓடினார்கள். சோமாசுரன், மாயாபலி, சுரகேசரி, பதுமன், மாருதபலி, தண்டகன், வாமன், வருணன், மாகதன் முதலிய வர்களின் மாயாவிப் போர்முறை யாவும் தேவ ராஜகுமாரனின் மந்திர பலத்துக்கு முன்னால் ஏதும் செய்ய இயலவில்லை.

அசுர வீரர்களின் தோல்வியையும், அவர்கள் மடிவதை யும், சயந்தனின் ஆற்றலையும் கண்ட பானுகோபன் சுக்கிராச் சாரியார் முன்பு தனக்கு உபதேசித்திருந்த மூல ஞான மந்தி ரத்தை ஜபிக்கத் தொடங்கினான். அதன் மூலம் சயந்தன் செய்யும் மாயைகளை அறிந்து அதற்கு எதிராகப் போர் செய் . சயந்தனின் மாய உருவங்கள் எல்லாம் மறைந்து ன. சயந்தன் தன்னந் தனியனாக ஐராவதத்தின் மீது அமர்ந்திருந்தான். அவனுக்கு அருகில் ஆர்த்துச் சென்றான் பானுகோபன். "இந்திர குமாரா! நான் உனக்குப் பக்கத்தில் வந்தவுடனேயே உன் மாயா பலம் மறைந்து விட்டதெனில், வலிமை எப்படிப் பட்டது என்பதைத் தெரிந்து கொள். ப் பருவத்திலேயே நான் பகலவனைச் சிறை புரிந்தவன்.

எப்படிச் சிறை வைத்தேன் என்று நீ கண்ணுக்கு நேரே உணருவதற்காக இப்போது உன்னையும் சிறையில் அடைக்கப் போகிறேன். ஆற்றல் இருந்தால் வா என்னுடன் போருக்கு'' என்று அழைத்தான். இதைக் கேட்டதும் சயந்தனுக்குச் சினம் பிறந்தது.

இந்திர குமாரனுக்கும் சூர குமாரனுக்குமிடையே கடுமையான யுத்தம் நடந்தது. ஒன்றுக்கொன்று நேர் எதிரான அசுர சக்திக்கும் தேவசக்திக்கும் உருவகம் தாங்கிய இளைஞர்களின் யுத்தம் அற்புதமாக இருந்தது. இருவருமே சளைக்காமல் ஒருவரை யொருவர் சாடிக் கொண்டார்கள். தேரிழந்து மறு தேர் ஏறிய பானுகோபன் சயந்தன் உடல் மீதும், ஐராவதத்தின் மீதும் சரமாரி பொழிந்தான். சயந்தன் மயங்கி வெள்ளை யானை மீது விழுந்தான். அவனது உடலிலிருந்து பெருகிய உதிரம் தண்ணென்று தன் மீது பட்டதும் விசுவாசம் மிக்க வெள்ளை வாரணமாகிய ஐராவதம் நிலைமையைப் புரிந்து கொண்டது; கடுஞ் சினம் கொண்டது; பானுகோபனுடைய தேர் மீது பாய்ந்தது. தேரில் பூட்டப்பட்டிருந்த குதிரைகளையும், தேர்ப் பாகனையும் தாக்கி அழித்தது. தேரையும் ஓங்கித் தரையில் வீசி நொறுக்கியது. தேரிலிருந்த பானுகோபன் பூமியில் குதித்தான். வெகுண்டு ஐராவதத்துடன் போர் செய்தான், அவனது மார்பில் முட்டியது ஐராவதம். ஐராவதம் முட்டியதால் பானுகோபன் அழியவில்லை. மாறாக, யானையின் தந்தங்கள் முறிந்தன. பானுகோபன் ஆவேசத்தோடு ஐராவதத்தின் துதிக்கையை ஒரு கையினால் பிடித்து முறுக்கிக் கொண்டு மற்றொரு கையினால் திவ்விய கஜத்தை ஓங்கி அறைந்தான். குன்றமெனப் பருத்து நின்ற ஐராவதம் அடியின் பலத்தில் பாதியும், அடியுண்ட அவமானத்தால் பாதியுமாகத் தன் சக்தியை இழந்து அப்படியே தரையில் சாய்ந்தது. அதன் மீது மயங்கிக் கிடந்த சயந்தன் நிலத்தில் உருண்டு விழுந்தான். பூமி ஸ்பரிசம் பட்டதும் மயக்கத்தினின்று தெளிந்தான். நடந்தவற்றை யெல்லாம் அறிந்தான். தனது ஆற்றல் அடங்கி' யொடுங்கி விட்டது என்பதை உணர்ந்தான்.

அசுர வீரர்களின் தலைவர்கள் அசக்தனைக் கிடக்கும் சயந்தனைச் சூழ்ந்து கொண்டு, ''அடியுங்கள்; உதையுங்கள்;

என்று கூச்சலிட்டார்கள். அவர்களை விலக்கிக்கொண்டு அங்கே வந்த பானுகோபன், "இவனைத் துன்புறுத்தாமல் தேவர்கள் இருக்கும் சிறைக் கூடத்தில் கொண்டு போய் அடையுங்கள்" என்று உத்தரவிட்டான். என்ன இருந்தாலும் அசுரர்களின் இளவரசன் அல்லவா? அவனிடம் ஓரளவு கௌரவ புத்தி இருக்கவே செய்தது.

அசுர வீரர்கள் கயிற்றினால் கட்டி ஏற்கனவே சிறை செய்யப்பட்டிருந்த தேவர் கூட்டத்தோடு இமையவரின் இளவரசனையும் சேர்த்து விட்டார்கள்.

வெற்றி கண்ட அசுரர்களின் வெறி முற்றியது. சொர்க்கம் எங்கும் சுற்றித் தேவர்களையும் அரம்பையர்களையும் பிடித்து வந்து பானுகோபன் முன்பு அசுர வீரர்கள் நிறுத்தினார்கள். சொர்க்கத்தைக் கொளுத்திச் சாம்பராக்கி மிகவும் மகிழ்ந்தார்கள். தேவர்கள் சிறைப் பட்டதையும் பொன்னுலகம் மயானமானதையும் கண்ட பானுகோபன் அளவிலா ஆனந்தமடைந்தான். அசுரர்களை அழைத்து, "நம்மை எதிர்த்த வானவர்களும் இந்திர குமாரனும் அடிமைகளாக எனக்கு முன்னே செல்ல, அவர்கள் கூறுமல் கூறும் வெற்றியின் உறைவிடமாக நான் அவர்களுக்குப் பின் ஊர்வலம் வரவேண்டும்" என்று ஆணையிட்டான். அதன்படி அசுரர்கள் தேவர்களையும் சயந்தனையும் இழுத்துக் கொண்டு முன்னே சென்றார்கள். பானுகோபன் வெற்றி வீரனாக மகேந்திரபுரியை அடைந்தான்.

சிறைப்பட்ட தேவர்கள் சூரபன்மன் முன்னிலையில் நிறுத்தப்பட்டனர். பெருமிதத்துடன் தனது போர்த் திறனைத் தந்தைக்கு விளக்கினான் பானுகோபன். சங்கற்பத்தைச் சிறப்புற நிறைவேற்றித் திரும்பிய மகனைச் சூரபன்மன் ஆரத் தழுவிக் கொண்டான். மகனை மகிழ்ச்சியுடன் கண்ட அதே கண்களால் அனலை உமிழ்ந்தபடி தேவர்களை நோக்கினான் சூரன். "என் தங்கையின் கரம் வெட்டுப்பட்டதற்குப் பிரதியாக இவர்கள் எல்லோருடைய கைகளையும் துண்டியுங்கள்" என்று காவலாளிகளுக்குக் கட்டளையிட்டான். வானவர்களின் கைகளையும் கால்களையும் காதுகளையும் அசமுகியின் எதிரிலேயே வெட்டி மகிழ்ந்தனர் காவலாளிகள். ஆனால் என்னே அதிசயம்! தேவர்களின் அங்கங்களை வெட்ட வெட்ட தவ

வலிமையால் அவர்களுக்கு அங்கங்கள் மீண்டும் வளர்ந்தன. சூரபன்மன் பழிக்குப் பழி வாங்க முடியாது என்று கண்டான்.

தேவர்களுக்கும் தேவராஜ குமாரன் சயந்தனுக்கும் விலங்கு பூட்டப்பட்டது. சிறையில் அடைக்கப்பட்டார்கள். அதன் பின்பு அவர்கள் அநுபவித்த இழி வாழ்வு காரணமாக தேவர்கள் தாங்கள் ஏன் முன்பு அமுதம் அருந்தினோம் என்றே வருந்தலானார்கள். இப்போது அசுரரிடம் தோல்வியுற்றதற்குப் பதில் முன்பு அமுதம் கடையும்போதே அவர்களிடம் தோற்றிருக்கலாகாதா என்று எண்ணினார்கள். தேவர்கள் அமிர்தம் உண்டிருந்ததால் மரணத்தை வென்று விட்டார்கள். இப்போது அற்பரும் கயவருமான அசுரர்களின் கொடுங்கோன்மைக்கு ஆளாகி அடிமை புரிந்த அமரர்கள் சாவையே வரவேற்றனர். ஆனால் அமுதமுண்டவர் எப்படிச் சாக முடியும்?

தீமையின் கலப்பில்லாத நன்மையே உலகில் கிடையாது. ஒளியும் நிழலும் சேர்ந்துதான் இருக்கும்.

அங்கே போர்க்களத்தில் பானுகோபனின் தாக்குதலால் மயங்கி விழுந்த ஐராவதம் அறிவு தெளிந்து எழுந்தது. அசுரர் வசமாகி அழிந்து போன அமராவதிக்குள் நுழைய அதன் கம்பீரமான கால்கள் கூசின. பதவி போனபின் பரமன் நினைவு மிகுந்தது. பரமன் நினைவு வந்தால் தமிழ் மண்ணின் நினைவும் வரும். திருவெண்காடு என்ற திவ்விய ஸ்தலத்தை ஐராவதம் அடைந்தது. அங்கு எம்பெருமானைச் சிவாகம விதிப்படி பூசித்து, சிவபெருமான் திருவருளால், முன்பு இழந்த கோடுகளைத் திரும்பப் பெற்றது; திருவெண்காட்டிலேயே தங்கி விட்டது.

அயிராணியுடன் மேரு மலையை அடைந்த இந்திரன் சொர்க்கம் எரியுண்டதையும் சயந்தன் சிறைப்பட்டதையும் அறிந்து துடிதுடித்தான்.

சிவபெருமானை நோக்கி நெடுநாட்கள் தவம் புரிந்தான். தேவர்களின் சிவாபசாரக் குற்றம் நீங்கும் தருணம் வந்தது. தருணேந்து சேகரப் பெருமான் தரிசனம் தந்தார்.

தமது மாமதுர மலர்வாய் திறந்து, தேமதுரத் திருவு திறந்து, "நாம் உமையை மணந்து ஒரு குமாரனைத் தருவே

அவன் அசுரர்களை அழித்து உங்களுக்கு வாழ்வு தருவான்" என்று அருளி மறைந்தார் சிவபெருமான்.

பின்னர் நடந்ததெல்லாம் நாமறிவோம். எனினும், எல்லாமறியும் சர்வக்ஞராம் சண்முகநாதன் அறியாததுபோல் மாயம் செய்ததால், செவ்வேட் பரமன் செந்திற் கரையில் எழுந்தருளியிருக்க அசுர உற்பத்தியிலிருந்து தொடங்கி வரலாற்றினை விரித்துரைத்த வியாழ பகவான் தொடர்ந்து கூறுவார் :

விஷ்ணு பிரம்மன் முதலிய தேவர்களுடன் இந்திரன் ஆலோசனை நடத்தி மன்மதனைச் சிவபெருமானிடம் அனுப்பினன். பெருமான் மீது மலர்க்கணை விடுத்த மன்மதன் எரிந்து சாம்பரானன். இதனைக் கண்டு கலங்கிய தேவர்கள் தங்களை இனியும் சோதிக்கலாகாது என்று எம்பெருமானை வேண்டிக் கொண்டனர். ஐயனும் உளம் குழைந்தார். பார்வதி தேவியை மணந்த பரமேசுவரர் தேவரீரைத் தமது நெற்றிக் கண்களினின்றும் தந்தருளினர். தாங்கள் திரு அவதாரம் செய்த பின்பே இந்திரனும் பிரம்மவிஷ்ணுக்களும் மற்ற வானவரும் முனிவரும் புத்துணர்ச்சி பெற்றனர். ஆயினும் அவர்கள் துன்பம் முழுமையாகத் தீரமல் சூராதியவுணரின் ஆட்சியே இன்னமும் நடைபெற்று வருகின்றது. அவர்களை அழிக்கத் தங்களையன்றி வேறு எவராலும் இயலாது. ஆகவே, தாங்கள் விரைவிலேயே நல்லசுரர் வாழ வல்லசுரர் மாய அருள் புரிய வேணும்" என்று வியாழ பகவான் கந்தக் கடவுளிடம் முறையிட்டுக் கொண்டார்.

வியாழ பகவானின் முதுகைத் தமது திருவிரல்களால் தடவிக் கொடுத்து அருள் புரிந்தார் குமாரசுவாமி.

"எம்பெருமானே! தேவரீர் அந்தச் சூரனை அழிக்க வேண்டும் என்று திருவுளம் கொண்டால் கொடிப் பொழுதில் அவ்வண்ணமே நடந்துவிடும். ஆயினும், தேவரீர் ஒரு திருவிளையாடலை எண்ணி இங்கு எழுந்தருளியிருக்கின்றீர்கள்" ...ரர் வியாழ பகவான்.

...ந்தவேள் தமது காந்தக் கண் ஒளியைத் தேவராஜனிடம் ... "... ... வேண்டாம்! தேவர்களைத்

சிறை மீட்டு விண்ணுலக ஆட்சியைப் பழையபடியே உனக்குத் தருவோம்" என்று வாக்களித்தார் சத்திய ஸ்வரூபமான சக்திகுமாரர்.

பல்லாண்டுகளாக மழையின்றிக் காய்ந்து பாளம் பாளமாக வெடித்த பூமியின்மீது அமுத மழை பெய்தால் அதனைலம் எவ்வளவு ஆர்வமாக உள்ளிழுத்துக் கொள்ளும்? அதே போல் துன்பத்துக்குமேல் துன்பமாக அநுபவித்து, அயர்ந்து போய் அதனைத் தீர்க்கவென்றே பிறந்த முருகனின் அருளை நாடிய வானவர் ஆறுமுகனின் அபய வாக்கினை ஆர்வத்தோடு அருந்தினர். தம்மைக் காக்க வென்றே பிறந்த தெய்வத்தின் அபய வாக்கு கேட்டுத் தேவர்கள் எல்லையில்லாத உவகை பெற்றுக் கருணைமூர்த்திக்குப் போற்றி கூறினர்.

## வீரவாகு தேவர் தூது

ஆணினைவிட உடலுக்குச் சிறந்த உறுப்பு இல்லை. பெண்ணுக்குக் கணவனைவிடச் சிறந்த உறவு இல்லை. மக்களை விட மனிதனுக்குச் சிறந்த செல்வம் இல்லை. தாயை விடச் சிறந்த தெய்வம் உலகில் ஒருவருக்கு இல்லை. இது போல, தூதை விடச் சிறந்த உறுப்பு காப்பியத்துக்கு இல்லை. நமது காப்பியங்களிலெல்லாம் தூது முக்கியமான இடம் பெற்றுள்ளது. இராமாயணத்தில் அங்கதன் தூது, மகாபாரதத்தில் கிருஷ்ணன் தூது, நைடதத்தில் அன்னப் பட்சியின் தூது முதலியன முக்கியமான இடம் பெற்றுள்ளன. இதிஹாஸ புராணங்களின் இலட்சணத்துக்கு ஏற்பக் கந்த புராணத்தில் வீரவாகு தேவர் தூது சிறப்பாக அமைந்துள்ளது. தூது சென்றவர் வீரம் விழுமிய திருத்தோள் பெற்ற வீரவாகு தேவர்; தூது அனுப்பியவர் சாட்சாத் ஷண்முகநாதனே யாவர்.

திருச்செந்தூரில் தேவாதியரின் துயர்களைத் திருச்செவி மடுத்து இன்னல் தீர்ப்பதாக அபயம் அளித்த ஐயன் உடனே போருக்குப் புறப்பட்டு விடவில்லை. ஏனெனில், இறைவனின் சக்தி சாந்தியிலேயே நிலைபெற்றது. சாந்தமான முறை

சூரனுடைய தவற்றைத் திருத்த வொண்ணுமற் போனுலே போர் புரிய வேண்டுமென எண்ணினுர் சுவாமி. சாம—தான—பேத—தண்டம் என்றவாறு படிப்படியாகவே போருக்குச் செல்ல வேண்டும் எனக் கருதினுர். எதிராளியின் நல்லெண்ணத்துக்கு முழு இடமும் அளிக்கத் திருஉளம் கொண்டார். எனவேதான் சூரனிடம் முதலில் பேசிப் பார்ப்பது எனக் கருதினுர்.

"தூதன் சொற்கேட்டுச் சூரன் தேவர்களைச் சிறையிலிருந்து விடுவித்தால் அழியாமல் வாழ்வான். அவ்வாறு செய்ய மறுத்தால், நாமே சென்று அவனை யழிப்போம். இதுவே அறநெறி" என்று கூறினுர் ஷண்முகர். வானவரும் சுவாமியின் உத்தேசத்தை ஆமோதித்தனர்.

"நமது வீரர்களில் சூரபன்மனிடம் வீரமகேந்திரபுரிக்குத் தூது செல்லத் தக்கவர் யார்?" என்று வேலவர் கேட்டார்.

"கந்தநாயக! தேவர்களின் நிலைமை தங்களுக்குத் தெரியாததல்ல. அடியேன் உட்பட வானவர்கள் அனைவரும் சூரனுக்குக் கைகட்டி ஏவல் செய்து வருகிறோம். ஆகவே, நம்மில் யாவரும் சூரனிடம் தூது சென்று உயிருடன் மீள முடியாது. வீரவாகு தேவர் ஒருவர்தான் தூது சென்றுல் காரியத்தைச் சிறப்புற நிறைவேற்றி விட்டுச் சூரனிடமிருந்து வெற்றியுடன் திரும்பி வரமுடியும்" என்று பிரம்மதேவர் கூறினுர்.

ஐயனின் திருஉள்ளத்துக்கு உகந்த யோசனையாகவே அது அமைந்தது. தமது பேரன்புக்குரிய வீரவாகுவை அருள் கனிய நோக்கினுர் ஆறுமுகன்.

"வீரவாகு! நீ வீரமகேந்திரபுரிக்கு விரைந்து சென்று சூரபன்மனை அணுகி, சயந்தனையும் தேவர்களையும் சிறையிலிருந்து விடுவித்து நல்வாழ்வு வாழுமாறு அவனுக்கு அறநெறியை எடுத்துக் கூறு. அவன் செவி சாய்க்கா விட்டால், அவனையும் அவனது சுற்றத்தையும் அழிக்க நாம் நாளையே படைகளுடன் வருவோம் என்று தெரிவித்து மீண்டு வருக" என்று குமாரக் கடவுள் வீரவாகு தேவருக்குக் கட்டளையிட்டார்.

அப்பணியைத் தலைமேல் தாங்கி வீரவாகு தேவர் புறப்

புத்திரவாத்ஸல்யம் மேலோங்கிய இந்திரன் வீரவாகு தேவரின் பின் சென்று, "வீரரே! முதலில் வீரமகேந்திரத்தில் சிறைப்பட்டிருக்கும் என் குமாரன் சயந்தனையும் மற்ற தேவர்களையும் கண்டு ஆறுதல் கூற வேண்டும். பின்பு தூது செல்லும் வேலையை முடிப்பீராக!" என்று பிரார்த்தித்துக் கொண்டான்.

தேவர்கோனின் துயரத்தை அநுதாபத்துடன் புரிந்து கொண்ட வீரவாகுதேவர் "அவ்வாறே செய்வோம். கவலைப் பட வேண்டாம்" என்று கூறிப் புறப்பட்டார்.

இலக்கத்தெட்டு வீரர்களும் அவரை வணங்கிப் பின் தொடரலாயினர்.

"நீங்கள் பூதப் படைத் தலைவர்களுடன் இங்கேயே இருங்கள்" என்று அவர்களுக்கு உத்தரவிட்டுப் புறப்பட்ட வீரவாகுதேவர் கடற்கரையை அடைந்தார்.

வீரவாகுதேவர் தம் கால்களின் வீரகண்டை 'கலீர் கலீர்' என ஒலிக்கக் கந்தமாதன பர்வதத்தின் உச்சியில் ஏறி நின்றார். அவர் உற்சாகத்துடன் திமுதிமு என ஏறி நின்றதும் அந்தப் பாரம் தாங்காமல் மலை பிளந்து நிலத்தில் அழுந்தி விட்டது. போரில் தோற்று ஓடி வந்து அந்த மலைக் குகைகளில் ஒளிந்து கொண்டிருந்த தாரகனின் படை வீரர்கள் வெளிப்பட்டனர்; வீரவாகுதேவரைக் கண்டதுமே புலன்களெல்லாம் செயலிழக்க, உயிரை விட்டனர். மகேந்திர புரிக்குச் செல்ல வேண்டும் என்று எண்ணிய வீரவாகுதேவர் 'கந்தநாயகா' என்று தியானித்தார். அகில புவனண்டமாகவும் விளங்கும் ஐயனின் பெருமையை உள்ளத்தில் இருத்தி அதனுடன் வீரவாகுதேவர் லயம் அடைந்தபடியால் அவருமே விசுவரூபம் கொண்டார்.

உலகங்கள் எல்லாவற்றையும் ஒருங்கே பார்க்கத் தக்க அளவில் பெரியதாக விளங்கினார் வீரவாகுதேவர். அங்கு நின்றபடியே உலகில் உள்ள நகரங்களையெல்லாம் பார்த்தார். சூரபன்மனின் பெரிய நகரத்தையும் நோக்கினார். அந்த நகரத்தையே கையால் பிசைந்து பகைவர்களையெல்லாம் கொன்று விடலாமா என்று ஓர் எண்ணம் தோன்றி சயந்தனும் மற்ற வானவரும் அங்குள்ள சிறையிலிருப்

